# ஒளியை நோக்கி

கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம் நடாத்தும்
விருதளிப்பு ~ பண்பாட்டுக் கலைவிழா







ஆறாம் ஆண்டு
சிறப்பு மலர்
2013

EVENT DECLARATION & AWARD GIVEN BY

*Honourable John McKay M.P*

Member of Parliament Scarborough-Guildwood

05TH OF OCTOBER, SATURDAY 2013 FROM 06:30 PM TO 10:30 PM
AT PERIYA SIVAN TEMPLE HALL,
1148 BELLAMY ROAD, SCARBOROUGH, ON (BELLAMY & PROGRESS)

CANADIAN TAMIL WOMEN ASSOCIATION
AWARD GIVING & CULTURAL PROGRAM 2013







**திரு. சரஸ்வதி அரிகிருஷ்ணன்**
**ஐந்தாம் ஆண்டு**
**அஞ்சலி தினம்**
**02 - 10 - 2013**

ஆண்டுகள் ஐந்து ஓடி மறைந்தது,
மீண்டு வர மாட்டீர்ரென்று தெரிந்தும்
சான்று பல சொல்லுகிறார்மனம் தாங்கலையே,
ஆண்டுகள் ஐம்பது உடனிருந்த உயிரல்லவா.

பார்க்கும் இடமெல்லாம் உம் தோற்றம்,
சேர்க்கும் எழுத்திலும் உன் முகமே,
யார்க்கும் தெரியாது என் சோகம்,
தீர்க வழியுண்டோ என் கண்ணீர்.

ஐயா, பேரன் பேர்த்திகளெல்லாம் வளர்ந்து விட்டனர்,
நேர்த்தியாய் கல்வியறிவும் பெறுகின்றனர்
கீர்த்தி பெற்று வாழ்வாங்கு வாழஆசி
பூர்த்தியாய் வாங்கிடுவீர் அதுவே என்னாசை!

நாள்தோறும் முயற்சியெல்லாம் நன்றே நடக்க,
என் சேவையும் பழுதின்றி அமைய
என்னோடு உழைப்போரும் நலமே பயன்பெற
என்னோடிருந்து கைகொடுப்பீர் அதுவே போதும்.

காலம் கனியும் போது வந்திடுவேன் தடையின்றி
ஞாலத்தில் உள்ளவரை உற்ற துணையாயிருப்பீர்
கலக்கமேதுமில்லை கண்ணீரும் வற்றவில்லை
புகழவும் வார்த்தையில்லை புண்ணியனே
நின் தாழ் சரண்,

என்னென்றும் உம்மோடு
வாழும் மனைவி
சரஸ்வதி அரிகிருஷ்ணன்




# என்னுரை



கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம் தனது ஆறாம் ஆண்டு விழாவினை பல புதிய அம்சங்களுடன் இன்று மேடை ஏற்றுகிறது. மகளிரின் ஆற்றல் அளப்பரியது. கடந்த ஆறு ஆண்டுகளாக கனேடிய மகளிர் அதனை நிரூபித்து வருகிறார்கள்.

முன்னூறுக்கும் அதிகமானோர்க்கு அரசு வழி நற்சான்றுகள் வழங்கியுள்ளோம். பலருக்கு வாழ்நாள் சாதனையாளர் விருது வழங்கப்பட்டுள்ளது. பொன்விழா கண்ட தம்பதிகள் பலர் கௌரவிக்கப்பட்டுள்ளனர். எதிர் வரும் ஆண்டுகளில் மேலும் சிறப்பாக நிகழ்வுகளை வெற்றிகரமாக நடத்த எண்ணியுள்ளோம்.

இவ்வாண்டு குழந்தைகளுக்கு தீபாவளி அன்பளிப்பு வழங்கப்படுகிறது. இது நமது பாரம்பரியம். அதையும் அறிமுகப் படுத்தி மகிழ்வதே எங்கள் நோக்கம். பெண்கள் பூப் போடுவதற்கும் வரவேற்பு தட்டு ஏந்துவதற்கும் பயன்படுத்தும் காலம் மலையேறிவிட்டது. இன்று இங்கு நடைபெறும் இதே நிகழ்வு எதிர் வரும் டிசம்பர் திங்கள் 28 ஆம் நாள் மலேசியாவில் நடைபெறவிருக்கிறது என்பதை பெருமையுடன் அறியத்தருகின்றேன்.

காலங் காலமாக கனடாவிற்கு கலைஞர்களை அழைக்கின்றோம். இப்பொழுது கனேடியக் கலைஞர்கள் மலேசியாவிற்குச் சென்று அற்புதமான நிகழ்வுகளை படைக்கவிருக்கின்றார்கள். நல்ல உள்ளம் கொண்டவர்களின் ஆசியுரை தான், வெற்றிக்கு காரணமாகும். கனேடிய மகளிர் மென் மேலும் சாதனைகள் படைக்க அன்பு உள்ளம் கொண்டவர்களும், ஆண்டவனும் தான் துணை.

எல்லா வெற்றியும் இறைவனுக்கே, நல்ல எண்ணமே, நல் வாழ்வு.

அன்புடன்
உங்கள் ஏற்பாட்டாளர்
சரஸ்வதி அரிகிருஷ்ணன்









*As the Member of Parliament for Scarborough - Guildwood,*

*I would like to recognize the contributions of*




# *Saraswathy Perumal (Sara)*




*To the*

# *Canadian Tamil Women's Association*




## *2013*




*Our Community and indeed our Nation is indebted*

*to those who give unselfishly of their time, energy and talents*

*toward our cultural richness.*

*On behalf of us all in Scarborough - Guildwood,*

*Thank you for your continued dedication and commitment.*







*Sincerely,*

*Hon. John McKay P.C., M.P.*

















# வாழ்த்துக் கவி

தனிநிகர் சரஸ்வதியின் - தலைமையில்
தழைத்தே வளர்ந்து வரும்
கனடியத் தமிழ் மகளிர் - மாமன்றம்
காண்கிறது ஆண்டுவிழா!

ஆறாவது ஆண்டு இதுவாம் - அரும்பணி
ஆற்றிடும் அரிய மன்றம்
நூறாண்டு வாழ்கவென - வாயார
நுடங்காது வாழ்த்திடுவோம்!

பெண்களை மதிக்கும் மன்றம் - முதியவர்
பெருமைகள் பேசும் மன்றம்
தண்டமிழ் வளர்க்கும் மன்றம் - தமிழரின்
தனித்துவம் பேணும் மன்றம்!

பாரதி வழியினிலே - பாவையர்
பண்பாட்டைப் பாங்குறவே
ஊருள மக்களுக்கு - உறவாடி
ஒளியேந்திக் காட்டும் விழா!

தூயவர் அரிகிருஷ்ணன் - ஆர்வுடன்
தொடக்கிய மகளிர்மன்றம்
ஆயவர் ஆண்டவனை - அடைந்திட்ட
ஐந்தாவது ஆண்டு விழா!

கட்டுரை கதை கவிதை - நாடகக்
கலைகளை வளர்த்தவர்கள்
அட்டதிக்கு எழுத்தாளர் - சரஸ்வதி
அரிகிருஷ்ணன் தம்பதியர்!

வாழிய அவர்பணிகள் - மானிடம்
மாண்புறும் வழிவகைகள்
வாழிய தமிழ்மகளிர் - மாமன்றம்
வாழிய வாழியவே!

- தமிழவேள் வி. கந்தவனம்

# சிறப்பு விருது பெறும் பிரமுகர்.

டாக்டர் போல் ஜோசப்




புகழோடு தோன்றி வாழ்வாங்கு வாழ்வதென்பது இறைவன் கொடுக்கும் வரும். அந்த வரம் எல்லேருக்கும் கிடைப்பதரிது. இவ்வரத்தைப் பெற்று வாழ்வாங்கு வாழ்ந்து வருபவர் திருவாளர் டாக்டர் போல் ஜோசப். 1995 ஆம் ஆண்டு உயர்நிலைக் கல்வியை முடித்து வைத்தியர் ஆகவேண்டும் என்ற தன் கனவை நனவாக்க இவருக்கு டாக்டர் எம்.ஜி ராமச்சந்திரன் கைகொடுத்தார் என்பதை மிகவும் பெருமையுடன் கூறுகின்றார்.

டாக்டர் போல் ஜோசப் வைத்தியப் படிப்பிற்காக இந்தியா தமிழ்நாட்டிற்குச் சென்று அங்கு எம்.ஜி.ஆர் பல்கலைக்கழகத்தில் மேற்கிந்திய மருத்துவம் படித்து முடித்தார். இவர் அதே பல்கலைக்கழகத்தில் பல ஆண்டுகள் பேராசிரியராகப் பணி ஆற்றினார். பின்னர் "ஆக்கிபஞ்சர்" என்ற சீன மருத்துவத்தில் தேர்ச்சி பெற்றார். ஹேமியோபதி மருத்துவத்தையும் முறையாகக் கற்று தன்னகத்தே பல திறமைகளை சேர்த்தார் டாக்டர் போல் ஜோசப்.

டாக்டர் போல் ஜோசப்பின் இளமைக்காலத்தில் தமிழினத்திற்காகப் பல போராட்டங்களில் கலந்து கொண்டது மட்டுமல்லாது தனது தாய் மண்ணிற்கும், தாய் மொழிக்கும் சேவை செய்யத் தவறியதில்லை. இலங்கைக் கலவரத்தின் போது யாழ் பொது நூலகத்தை பேரினவாதிகள் எரித்து சாம்பலாக்கினார்கள். அதைப்பார்த்த போதகர் டேவிட் என்பவர் கண்கலங்கி மயங்கி விழுந்து அந்த இடத்திலேயே மரித்தார் என்பதை டாக்டர் போல் ஜோசப் ஒவ்வொரு தடவையும் கூறி வருந்தினார். போராட்ட காலத்தில் போராட்டத்தில் ஈடுபட்டு பலமுறை சிறைத்தண்டனை அனுபவித்ததாகவும் கூறியுள்ளார்.

கனேடிய மண்ணில் உள்ள முன்னனி வானொலிகள், பத்திரிகைகள், தொலைக்காட்சிகளிலும் டாக்டர் போல் அவர்களின் மருத்துவத் திறானய்வுகளும் ஆலோசனைகளும் வெளிவந்த வண்ணமே இருக்கின்றது.

இவர் 1982 ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் கர்நாடக சங்கீதத்தில் பட்டம் பெற்ற ஹேமாவதி என்ற பெண்ணை திருமணம் புரிந்து தனது மனைவியாக்கிக் கொண்டார். இவர்களுக்கு வாரிசுகளாக மேரி குர்ரி என்ற பெண்மகளும், சோலமண் என்ற ஆண் மகனையும் குழந்தைச் செல்வங்களாகப் பெற்றார்கள். இவருடைய மகள் தனது பல் மருத்துப்படிப்பை முடித்துள்ளார்.

டாக்டர் போல் பல மருத்துவத் திறனாய்வுக் கட்டுரைகளை எழுதி பல முன்னனிப் பத்திரிகைகளில் தனக்கென்று ஒரு இடம் பதித்துள்ளார். டாக்டர் போல் ஜோசப் அவர்களுக்கு " **சேவைச் மனச் செம்மல்** " என்ற விருது வழங்கி கௌரவப்படுத்துவதில் கனேடிய மகளிர் மாமன்றம் பெருமையடைகின்றது.

டாக்டர் போல் ஜோசப் அவர்களின் சேவை எல்லா இனத்தவர்களுக்கும் பயன்பட வேணடும் என்று கூறி அவரை வாழ்த்துகின்றோம்.

# பொன்விழா கண்ட தம்பதிகள்

திரு.திருமதி சீனியப்பா ராஜரத்தினம் - பரிமளகாந்தி.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்
வானுரையும் தெய்வத்துள் வைக்கப்படும்"



என்கின்றது வள்ளுவம். கடந்த 61 ஆண்டுகளாக கணவன் மனைவியாக வாழ்ந்து வருபவர்கள் ராஜரத்தினம் - பரிமளகாந்தி தம்பதிகள். வாழ்க்கையின் மேடு பள்ளங்களை நன்கு உணர்ந்தவர்கள். இலங்கையில் புன்னாலைக்கட்டுவன் என்ற ஊரில் 1930 ஆம் ஆண்டு பிறந்தவர் திரு சீனியப்பா ராஜரத்தினம். விஞ்ஞான பீடத்தில் மேல்ப்படிவம் பயின்று அரசுத் துறை ஆசிரியராக 34 வருடங்கள் பணிபுரிந்தவர். 1952 ஆம் ஆண்டு பரிமளகாந்தியை வாழ்க்கைத் துணையாகப் பெற்றார். பரிமளகாந்தி அம்மையாரும் 28 ஆண்டுகளாகத் தமிழ் ஆசிரியராகப் பணி புரிந்தவர்.

இந்தத் தம்பதிகளுக்கு ஒரு ஆண் மகனும் இரண்டு பெண்பிள்ளைகளும் உள்ளனர். இவர்களுக்கு வாரிசுகளாக எட்டு போரக்குழந்தைகளையும் பெற்றுள்ளனர். இவர்கள் அனைவரும் கனடாவிலேயே வசித்து வருகின்றனர். முதியோர்களுக்கு வளமான வாழ்க்கை அளித்து கவனித்து வரும் கனடா நாட்டைப்பற்றி மிகப் பெருமையாக தம்பதிகள் கூறுகின்றனர்.

இவர்களை பொன்விழாக் கண்ட தம்பதியினர் என்று பெருமைப்படுத்துவதில் கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம் பெருமை கொண்டு மகிழ்வடைகின்றது.

## ஒளியை நோக்கி - கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம் விருதளிப்பு - கலைவிழா ஏற்பாட்டுக் குழுவினர்.

திருமதி சரஸ்வதி அரிகிருஷ்ணன் பி.ஜே.கே
திருமதி ஜெயராணி பூபாலசிங்கம்
திருமதி மனோ தவராஜா
திருமதி சீத்தா கந்தையா
திருமதி அன்பரசி செல்வராஜ்
திருமதி பேரின்பவள்ளி சண்முகம்
திருமதி காந்தரூபி ராஜ்மோகன்
திருமதி பரமேஸ்வரி பாலபரதகுமாரன்
திருமதி பாக்கியம் மார்க்கண்டு
திருமதி சரோ பாஸ்கரன்
திருமதி நாகேஸ்வரி ராஜரத்தினம்
திருமதி ஞானேஸ்வரி கதிர்காமத்தம்பி
திருமதி திலகவதி சிவானந்தன்
திருமதி செல்லம்மா ராஜதுரை
திருமதி மனோகரி சதாசிவம்

## ஆலோசகர்கள்

திருமதி லலிதா புரூடி
திருமதி ராஜலட்சுமி பாலசுப்பிரமணியம்
தமிழ்வேள் வி கந்தவனம்
டாக்டர் போல் ஜோசப்

# Sivasithambaram Rajendram & Chellama Sivasithambaram




Married on December, 04th, 1961 and led a very happy married life in Srilanka as well as Canada. Have two children - Shanthi married to Ganeshaker and blessed with two daughters- Shivya and Nisha, Rajkumar married to Sashreha blessed daughter Thaneesha.

SivaSithambaram Rajendram was born in Kincora estate, upcot in the central province of Srilanka to Ramalingam Rajendram & Sathiah Thanaletchumy. Sithambaram's education

1. St. John Bosco's College, Hatton (Primary +High school)
2. St. Joseph's College, Trichy (Intermediate)
3. Madras Christian College, Tambaram (B.A (Hons))
4. University of Ceylon (Diploma in Education)

Occupation:

1. Teacher at St.John Bosco's Hatton (13 years)
2. Principal of Ramboda Tamil School (2 years)
3. Education officer in Nuwaea-eliya, Kandy and Banda rawela Districts (16 Years)
4. Director of Education in the Ministry of Education to be in charge of Planatation schools and Sida Funded Education development of Planatation schools (6 years) till retirement.

1944 Settled in Canada

Occupation: Security officer, Community Settlement worker

CHELLAM SITAMBARAM was born in Darrawella estate, Dickoya in the central province of Srilanka to Perumal Periyasamy and Letchumy Ammal.

Chellam's Education:

1. St.Gabriel's Convent, Hatton (up to grade 8)
2. Holy Cross College , Trichy (grade 12)
3. Stella maris College, Madras (Intermediate)
4. Residency College, Madras (Bsc.Zoology)
5. Diploma in Education, Open university, Srilanka

Occupation:

1. Teacher at St.Ursula's Convent Badulla (5 years)
2. Teacher at Highlands College, Hatton (5 years)
3. Principal at Highlands College, Hatton (7 years) (Retired in 1983)

Settled in Canada in 1989, Ever Since worked as a Community Settlement worker at South Asian Women's Centre, then at Thorncliff Neighborhood office & then at Flemingdon Health Centre. Retired in 2000 and worked independently as a community worker counselling & helping individuals.

# யாதும் ஊரே யாவரும் கேளிர்



உலகில் உள்ள எல்லா இனங்களிலும் பார்க்க மேம்பாடுடைய ஒரு பண்பாட்டையும் வரலாற்று சிறப்புமிக்க வீரத்தையும் தொன்மையானதொரு பாரம்பரியத்தையும் உடையவர்கள் தமிழர்கள். "கன்னடமும் களிதெலுங்கும் கவன் மலையாளமும் துளுவும் உன்றுகரத்த உதித்தெழுந்து ஒன்று பலவாயிடினும் ஆரியம் போல் உலக வழக்கு அழிந்தொழிந்து சிதையாஷன் சீரிளமைத் திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்ததுமே." என்று தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் வாழ்த்திய தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள்.

பல்வேறு நாடுகளில் வாழ்ந்த போதும் தமது பண்பாட்டை, கலாச்சாரத்தை மறவாது கலைகளை வளர்ப்பவர்களாய், இசை நடனம், கலை, கட்டிடம், சிற்பம், விஞ்ஞானம், மெய்ஞானம் போன்ற பற்பல துறைகளிலும் வல்லவர்கள் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்று எல்லோரையும் தமது ஊற்றத்தவராகக் கருதி வாழ்பவர்கள்.

தமிழில் முதன்முதலில் தோன்றிய இலக்கண நூலான தொல்காப்பியமும் தமிழனுடைய வாழ்வும் வளமும் உச்சநிலையில் உள்ளபோது தோன்றிய இலக்கியங்களான சங்க காலத்தைச் சேர்ந்த நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு போன்றவையும், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காப்பியங்களும், திருக்குறளும், பக்தி இலக்கியங்களும், தமிழின் பெருமை கூறும் நூல்களாக விளங்குகிறது.

"சென்றிடுவீர் எட்டுத்திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்" என்றார் பாரதி, அதற்கமைய எட்டுத்திக்கும் சென்று தமிழின் பெருமையைப் பரப்பும் பணியைச் செவ்வனே செய்து வருகின்றனர் தமிழர். அந்த வகையில் கனடாவில் தமிழ் வளர்க்கும் தமிழர் கலை வளர்க்கும் தமிழர் மலேசிய நகரில் தமது கலையை, தமிழை, பண்பாட்டை, கலாச்சாரத்தை மற்றும் அதன் சிறப்புக்களை எடுத்துக் கூறும் ஒரு அதி சிறப்புவாய்ந்த நிகழ்ச்சியான உறவுப்பாலம் என்ற நிகழ்ச்சியை திருமதி சரஸ்வதி அரிகிருஷ்ணன் ஒழுங்கு செய்து நடத்தவிருக்கின்றார். கனேடிய, மலேசிய, தமிழகம் மக்களிடையே புரிந்துணர்வை ஏற்படுத்தக்கூடிய, கலை, பண்பாட்டு, கலாச்சார உறவுப்பாலமாக இந்த நிகழ்ச்சி அமையவிருக்கின்றது. வெளியேயிருந்து கனடாவுக்கு கலைஞர் வரும் நிலை மாறி கனடாவில் இருந்து மலேசியாவுக்கு கனடாத் தமிழர் சென்று கலை நிகழ்ச்சி நடத்தி, இந்நிகழ்ச்சியின் மூலம் கலைத்தொடர்பு ஏற்படுத்துவது வரவேற்க வேண்டியது. உறவுப்பாலம் என்ற பெயர் இதற்கு மிகமிகப் பொருத்தமாகும். கலைஞர்களுக்கு உற்சாகத்தையும், ஆர்வத்தையும் அளிக்கக்கூடிய ஒரு நிகழ்வாக இது அமையும் என்று நம்புகின்றனர். இவர்களின் ஆர்வமும், திறமையும் மேலோங்க வேண்டும். நிகழ்ச்சிகள் சிறப்பாக நடாத்த வாழ்த்துக்கள்.

லீலா சிவானந்தன்

## வாழ்நாள் சாதனையாளர்

திருமதி சுந்தரேஸ்வரி காசிப்பிள்ளை (சுந்தரி)

திருமதி சுந்தரி காசிப்பிள்ளை ஜனவரி திங்கள் பதினைந்தாம் நாள் பதுளை நகரில் பிறந்தார். ஸ்ரீலங்காவில் உள்ள பதுளை நகர் சுசல வசதிகளும் நிறைந்தது என்று பெருமைபட கூறுவார்

எஸ்.எஸ்.சி எ லெவல் என்ற கல்வித் தகுதியை பெற்றுள்ளார். பதுளையில் சமூக சேவையிலும் பொதுப் பணிகளிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். திரு. காசிப்பிள்ளை அவர்களை மணமுடித்து சிறப்பாக தன் குடும்பத்தை வழி நடத்தி வந்தார்.

இவருக்கு இரண்டு பெண் பிள்ளைகளும், ஒரு ஆண் மகனும் உண்டு. பதினைந்து ஆண்டு காலமாக பொது வாழ்க்கையே சிறப்பு என்று வாழ்ந்த வருகிறார். பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு முன் சுந்தரியம்மாவின் கணவர் காலமானார்.

இளவயது பெண் போல் சுறுசுறுப்பாக இயங்கி வருகிறார். கடந்த பதினாறு ஆண்டுகளாக எட்டோபிக்கோ முதியோர் சங்கத்தில் தனது சேவையை வழங்கி வருகிறார். REXDALE WOMENS CENTRE என்ற அரசு நிறுவனத்தில் பொது உறவுத் துறை அதிகாரியாக பணிபுரிந்து வருகிறார்.

புதிதாக குடி வருபவர்களுக்கு ஆவனங்கள் பதிவு செய்து அவர்களின் பாதுகாப்பான வாழ்க்கைக்கு அரசு மானியங்களைப் பெற்றுத் தருவது இவரது பொன்னான கடமையாகும்.

கனேடிய மகளிர் மாமன்றம் இவருக்கு வாழ்நாள் சாதனையாளர் விருது கொடுத்து மகிழ்ச்சி படுத்துவதில் பெருமையடைகிறது.

## வாழ்நாள் சாதனையாளர்



சதாசிவம் பரந்தாமன் 25.03.1940 யாழ்ப்பாணம் கொக்குலில் கிழக்கு பிறந்தார். இவருடைய தகப்பனார் பெயர் சதாசிவம், தாயார் பெயர் செல்லமுத்து. தகப்பனார், தொழில் வியாபாரம். இவர் இலவசமாகத் திருமணப் பொருத்தம் பார்த்து கொடுப்பார். இதனால் இவரை சாத்திரியார் என்றும் அழைப்பது வளமையாகி விட்டது.

பரந்தாமனின் ஆரம்பக் கல்வி கொக்குலில் நாமகள் வித்தியா சாலையிலும் உயர்வகுப்பை கொக்குலில் இந்துக் கல்லூரியில் ஆரம்பித்தார். இளம் வயதில் விவசாயக் களகம் ஒன்றில் செயலாளராக கடமையில் இருந்து விவசாயிகளுக்கு பெரிதும் உதவி செய்தார்.

இவர் யாழ் கூட்டுறவுப் பயிற்சிக் கலாசாலையில் கூட்டுறவு பயிற்சி பெற்றார். இவர் யாழ் தொழில்நுட்பக் கல்லூரியில் சந்தைப்படுத்தல் பயிற்சி பெற்றவர். ஆரம்ப தொழிலாக வெதுப்பகம் ஒன்றை வீட்டோடு ஆரம்பித்து நடத்தி வந்தார். கூட்டுறவுத் துறையில் வேலைவாய்ப்புப் பெற்று சிட்டைலிகிதராகவும் பதவி உயர்வு பெற்று கிளை மேற்பார்வையாளராகவும் பணியாற்றி வந்தார்.

கொக்குலில் நந்தாலில் மனோன்மணி அம்பாள் அலைய பரிபாலன சபை திறம்பட இயங்க பெரியோர்களதும் வழிபடுவோர்களது ஒத்துழைப்புடன் வழிபடுவோர் சங்கம் ஒன்று அமைத்து அதில் 1992-95 காலப்பகுதியில் பொருளாளராக பணிபுரிந்து ஆலய வளர்ச்சிக்காக பாடுபட்டார்.

1995 யூன் மாதம் நாட்டை விட்டு வெளியேறி கனடாவில் குடியுரிமை பெற்று இங்கும் வெதுப்பகத்தில் பணிஆற்றி வந்தார். இவருக்கு ஒரு ஆண் மகனும் நாலு பெண் பிள்ளைகளுடன் இங்கு வாழ்கின்றார்கள். பொழுதுபோக்காக வானொலிகேட்டல் வானலையில் கவிதை வாசித்தல், பத்திரிகைகளுக்கும் கவிதை எழுதுதல் 2010-2011 காலப் பகுதியில் ஸ்காபுறோ முது தமிழர் சங்கத்தில் செயலாளராகவும் பணியாற்றி வந்ததோடு யுத்தத்தால் பாதிக்கப்பட்ட எம் மக்களின் மாணவ செல்வங்களுக்கும் தன்னால் ஆன பங்களிப்பையும் செய்து வருகிறார்.

இவருக்கு ஒரு மூத்த ஆண் சகோதரர் இருக்கின்றார். அவர் குடும்பமாக கொக்குலிலில் வசித்து வருகிறார். அவருக்கும் தன்னால் ஆன உதவிகளை செய்து வருகின்றார்.

இவரின் கவிதை தொகுப்பு வெளியீட்டின் மூலம் கிடைத்த தொகையை தமிழகத்தில் உள்ள மக்களுக்கு, உதவிப் பணமாக கொடுத்து உதவினார். இவருக்கு வாழ்நாள் சாதனையாளர் என்ற கௌரவத்தை வழங்கி கனேடிய மகளிர் மாமன்றம் பெருடையடைகின்றது.

## Thillainayaky Thuraisingham
## Date of birth July 3rd 1924



Went to Chundikuli girls' college from 1932 until 1940. She passed the senior Cambridge with exemption from matriculation and achieved distinctions in English, Botany, Arts and Home Science. She was elected twice as Carnival Queen in the Hindu College Carnival and in the St.Patrics College Carnival. She was married in 1940. Her husband was an assistant Civil Engineer in the Public Works Department. He was seconded for duty and was appointed as Major in the army. He was given a job as an officer in charge of the officers' mess he left the army when her oldest son was born in 1944. She have ten children, six boys and four girls and all the boys have a degree.

The youngest one has two; one in nuclear science and a Masters in Direct energy. She went to University Of Toronto and passed the Pre- University course and could not go further due to lack of free government grant. She has 22 grandchildren and 12 great grandchildren. One son is in Florida and one is in California. Her eldest daughter is a travel agent and works in Sri Lanka. Her husband has retired as deputy inspector of Police. She thanks god for providing her with a wonderful family.
May god bless you Thillaamma

## வாழ்நாள் சாதனையாளர்

### திரு. செல்லையா கந்தையா



திரு செல்லையா கந்தையா அவர்கள் ஸ்ரீலங்காவில் பதுளை மாநகரில் பிறந்தார். 1929ஆம் ஆண்டு பிறந்து வளர்ந்தார். எஸ்.எஸ்.சி வரை கல்வி பயின்றார். பதுளையை அடுத்துள்ள தேயிலை தோட்டத்தில் மேலாளராக பணியை ஆரம்பித்தார்.
சுயமாக தொழில் செய்ய முயற்சித்தார். அதன் பொருட்டு அச்சுத் தொழிலை ஆரம்பித்தார். பதிப்பகமாக உருவான தொழிலில் நன்கு பிரகாசித்தார்.
1956ஆம் ஆண்டு ராசமலர் என்ற பெண்ணை மணமுடித்தார். இரண்டு ஆண் பிள்ளைகளையும் இரண்டு பெண்களுமாக நான்கு மக்கட் செல்வங்களைப் பெற்று, இவர்களின் பேறாக எட்டு பேரப் பிள்ளைகளையும் பெற்று மகிழ்வான வாழ்க்கை வாழ்ந்து வருகின்றார்.
1983 ஸ்ரீலங்காவில் ஏற்பட்ட, உள்நாட்டு கலவரத்தினால் தேடிய சொத்து சுகத்தை இழந்து தமிழ்நாட்டில் குடியேறினார். ஐந்தாண்டுகள் குழந்தைகளுடன் போராட்டம் நடத்தினார்.

1989 ஆம் ஆண்டு உறவினர் துணையோடு கனடா வந்து சேர்ந்தார். கடந்த 24 ஆண்டுகளாக கனடாவில் நிம்மதியாக வாழ்ந்து வருகின்றார்.
"வந்தாரை வாழவைக்கும் கனடா" நாட்டில் தன்னால் இயன்ற பொதுச் சேவையையும் செய்து வருகிறார். கம்பளி சால்வைகளைப் பின்னி முதியோர்களுக்கு வழங்குவதில் திருப்தி காண்பதாக கூறுகிறார் திரு செல்லையா. இவருக்கு "வாழ்நாள் சாதனையாளர்" விருதளிப்பதில் கனேடிய மகளிர் மாமன்றம் பெருமை அடைகிறது.



27.11.2012, பங்சார் தமிழ்ப் பள்ளி முன்னாள் ஆசிரியர் கு. கன்னியப்பன் திருமதி சரஸ்வதி அரிகிருஷ்ணன் இடப்புறம் வகுப்பு தோழி திருமதி கிளியாம்பாள்.



அகில இந்திய வானொலி சென்னை ஒலிபரப்பின் நிர்வாகி திரு முருகன் (சேய்யோன்) அவர்களுடன் திருமதி சரஸ்வதி அரிகிருஷ்ணன். சென்னை வானொலியில் 6.12.2012 ஆம் ஆண்டு மகளிர் மன்றத்தின் சிறப்பான நேர்காணல் ஒலியேறியது.

கடந்த 7. 12, 2012 ஆம் நாள் பிரபல நடிகரும் கம்ப இராமாயண திறனாய்வாளருமான திருவாளர் சிவகுமார் அவர்களை திருமதி சரஸ்வதி அரிகிருஷ்ணன் சந்தித்தார். மலேசிய இரட்டை கோபுர சின்னத்தை நினைவு பரிசாக வழங்கி வாழ்த்தினார்.



திருவாளர் சிவகுமார் அவர்கள் தாம் வரைந்த இரண்டு ஓவியங்களை கனேடிய தமிழ் மகளிர் மாமன்ற ஏற்பாட்டாளருக்கு வழங்கி சிறப்பித்தார். ஒன்று மகாத்மா காந்தியின் உருவப்படம், மற்றது தமிழ்நாட்டு ஆலயங்களில் ஒன்று.



# கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம்
# " ஒளியை நோக்கி "
## 6ஆம் ஆண்டு விருதளிப்பு - கலைவிழா

## நிகழ்ச்சி நிரல்

மாலை 7 மணிக்கு குத்துவிளக்கேற்றி நிகழ்ச்சி ஆரம்பித்து வைக்கப்படும்.

. குத்துவிளக்கேற்றல்

. தேசியகீதம் - செல்வி திவ்யா பிராபாகரன்.

. தமிழ் வாழ்த்து - குமரி நவீனி பிலிக்ஸ்

. மன்ற கீதம் - மன்றக் குழுவினர்.

. இறைவணக்கம் - திருமதி பேரின்பவள்ளி சண்முகம்

. மௌன அஞ்சலி - ஒரு நிமிடம்

. வரவேற்புரை - திருமதி சரஸ்வதி அரிகிருஷ்ணன்

. திறப்பு விழா சிறப்புரை - மாண்புமிகு ஜோன் மெக்கே
நாடாளுமன்ற உறுப்பினர் (ஸ்காபுரோ கில்வுட்)

. வாழ்த்துரை - "தமிழ்வேள்" வி.கந்தவனம்.

. சிறப்புரை - அகரம் வானொலி உரிமையாளர்.

. மன்ற கொள்கை உரை - திருமதி ஸ்ரீதேவி ரவீந்திரா

. சிறப்பு கௌரவம் - பொன்விழா கண்ட தம்பதிகள், வாழ்நாள் சாதனையாளர்.

**பரிசளிப்பு**

. நடனம் - செல்வி சுவஸ்திகா சந்திரன், செல்வி சங்கீதா சந்திரன்.

. ஏற்புரை - டாக்டர் போல் ஜோசப்

. சங்கீதம் - திரு ஜனன் ஸ்ரீதர், திரு அன்ரன் பிலிக்ஸ், செல்வி திவ்யா ரவீந்திரா
செல்வி பிருந்தா ரவிந்திரா, ஷாஷா

. நடனம் - குமாரி பத்மஜா ரகுநாதன்

. நாடகம் - திருமதி ஜெயராணி குழுவினர்.

. நடனம் - குமாரி பவித்திரா தவராஜா மற்றும் மகணவிகள்.

. நடனம் - திருமதி ஜனனி லோகன் (நாட்டியப்பள்ளி)

. பாடல் - திருமதி ஜெயலட்சுமி தில்லைநாதன்.

. நன்றியுரை - திருமதி சீதாலட்சுமி கந்தையா.

# மலேசியாவில்
# கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம்
# " ஒளியை நோக்கி " பண்பாட்டுக் கலைவிழா

கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம் எதிர்வரும் 28.12.2013ம் நாள் சனிக்கிழமை அன்று மலேசியாவில் மாபெரும் கலைநிகழ்ச்சி ஒன்றை நடாத்தவுள்ளது. கனடா, மலேசியா, இந்தியா, இலங்கை கலைஞர்கள் பங்கு கொள்ளும் இக்கலைவிழா தேசிய தோட்ட தொழிலாளர் சங்க தோட்ட மாளியையில் நடைபெறும்.

கனடாவிலிருந்து பன்னிரெண்டு கலைஞர்கள் திரு ரஜீவன் குகதாஸ் தலைமையிலும், இந்தியாவிலிருந்து எட்டுக் கலைஞர்கள் திரு டில்லி கனோஷ் தலைமையிலும், இலங்கையிலிருந்து இரண்டு நடன மணிகளும், மலேசியாவிலிருந்து திரு ராமதாஸ் தலைமையில் பல கலைஞர்களும் கலந்து சிறப்பிக்க உள்ளனர்.

நான்கு நாட்டுக் கலைஞர்களும் கலந்து கொள்ளும் ஒரு ஒற்றுமைத் திருநாளாக நடைபெறும் இந்நிகழ்வு ஒரு மக்கள் திருநாளாகும். மலேசிய இந்திய காங்கிரஸ் தலைவர்களும், இந்து சங்கப் பேரவையினரும், எழுத்தாளர் சங்கம், மாத இதழ், வானொலி, தொலைக்காட்சி பேராளர்களும் கலந்து இந்நிகழ்ச்சியை சிறப்பிக்கவுள்னர்.

கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம் ஒழுங்கு செய்துள்ள இந்நிகழ்வு வெற்றி பெற பல நல்ல உள்ளங்கள் பெரும் உதவிகள் நல்கியுள்ளனர். அவர்கள் எல்லோருக்கும் கனேடிய தமிழ் மகளிர் மன்றம் தனது மனமார்ந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கின்றது.

ஒற்றுமையே உயர்வளிக்கும்

# நன்றி

கடந்த 2008ஆம் ஆண்டு முதல் இவ்வாண்டு 2013ஆம் ஆண்டு வரை பல அன்பு உள்ளங்களின் ஆதரவால் கனடா தமிழ் மகளிர் மாமன்றம் தனது சேவையை செவ்வனே செய்து வருகின்றது. TVI தொலைக்காட்சி, தமிழ் வண் தொலைக்காட்சி, கீதவாணி வானொலி, இதர வானொலிகள், மற்றும் பத்திரிகைகள், மாத இதழ்கள் நன்கொடையாளர்கள், விளம்பரதாரர்கள், மலேசிய நிகழ்ச்சிக்கு உதவி புரியும் அன்பர்கள், கலைஞர்கள் அனைவருக்கும் கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம் தனது நன்றியைக் கூற கடமைப்பட்டிருக்கின்றது.

**நன்றி ! நன்றி! நன்றி!**

## அமரர் திரு. புரூடி




கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம் 2008 ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. மன்றத்தின் ஆரம்ப நிகழ்வை திருமதி லலிதா புரூடி அம்மையார் தான் குத்துவிளக்கேற்றி ஆரம்பித்து வைத்தார்கள். இன்று அவர் தம் கணவரின் பிரிவால் மீளாத்துயரில் ஆழ்ந்திருப்பது கண்டு வேதனைப்படுகின்றோம். லலிதா அம்மையாரின் எழுத்துப் பணியும், சமூகத் தொண்டும் அவரை ஆசுவசப் படுத்தும் என்று நம்புகின்றோம். எமது மன்றத்தின் சார்பில் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கின்றோம். திரு. புரூடி அவர்களுக்கு மன்றத்தின் சார்பில் அஞ்சலி உரித்தாகட்டும்.




MLS
MULTIPLE LISTING SERVICE®


REALTOR®



கனேடிய தமிழ் மகளிர் மாமன்றத்தின் வெற்றிகரமான ஆறாம் ஆண்டு ஒளியை நோக்கி விழாவிற்கு சந்தனமாலை, பொன்னாடை, நினைவுச் சின்னங்கள் அன்பளிப்பு செய்த திரு. திருமதி இராமானுஜம் சீதாலட்சுமி தம்பதியினர் வாழ்க வளமுடன்.



கடந்த ஆண்டு 6-10-2012ல் நடைபெற்ற ஒளியை நோக்கி விழாவிற்கு நினைவுச் சின்னங்கள், கேடயங்கள் வழங்கிய திருவாளர் லோகன் ராசய்யா அவர்கள், என்றென்று நன்றியுடன்,

கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம்.

வாழ்க வளமுடன்,

# Anpu Tex - அன்பு ரெக்ஸ்

## IMPORTERS & WHOLESALERS

### FASHION TEXTILES & GIFTS

அமெரிக்கா, லண்டன், கனடா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளிலிருந்து புதிதாக வருவிக்கப்பட்ட நவீன டிசைன் ஆடைகளை குறைந்த விலையில் பெற்றுக் கொள்ளலாம்.



மகளிர் தொண்டு மகத்தானது
கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம்
நடாத்தும் ஒளியை நோக்கி நிகழ்ச்சி
வெற்றிபெற வாழ்த்துக்கள்

**3146 Eglinton Ave East,**
**Scarborough, ON. M1J 2H6**
**(Eglinton & Markham)**

**Tel : 416-269-5684**
**Fax : 416-269-0887**

## பெண்

பெண் இந்த பூவுலகின்
கண் என்பர் பெரியோர்கள்
தன்கருணை தான் பொழிவாள் தன்னை
பண் எடுத்து பாடிடுவார் கவிஞர்.

விண் உயர விதந்து தான் பாடிடினும்
மண்ணில் இங்கு மகளிர் நிலை வேறம்மா
பெண் என்பாள் போகப் பொருள் என்றே
கண்காட்சி பொருள் ஆக்கி காசாக்கும் ஒரு கூட்டம்-.

கண் போன்ற கல்வி ஆகாது உனக்கென்று
மண் ஆளும் ஒரு கூட்டம் மறுத்து நிற்கும்.
பெண் என்பாள் தனியாக வாழ்ந்திடிலோ
எண்ணிலா பழி சொல்லி ஏசிடும் ஒரு கூட்டம்.

பெண் தானே பெரும் சக்தி என்று
எண்ணி துணிந்தாலே எங்கும் நலமாகும்
தன்கருணை பொழிகின்ற தாய் ஆகி
விண் உயர தெய்வமென விளங்கிடுவாள் தான் இங்கு.

பண்பாடு விழுமியங்கள் பாங்குடனே தாம் பேணி
மண் மீது மங்கலங்கள் மாண்புடனே நிறைவாக்கி
கண்ணும் கருத்தும் கலந்து ஒன்றாய் இயங்குகின்ற
பெண்கள் தமை வாழ்த்தி பெரு வாழ்வு கண்டிடுவோம்



கவிதை - திரு. ஷி சத்யன்.

# நட்பு இறைவனின் கொடை



நட்பு என்னும் உறவு முறை மனிதர்களுக்கு இறைவன் அளித்த கொடை. இந்த உறவு முறையில் அன்பு என்னும் பண்பு முழு அளவில் பரிமாறப்படுகிறது. அன்பு இல்லாதபோதுதான் வெறுப்பு, பொறாமை, கோபம் போன்ற உணர்வுகள் தலைகாட்டுகின்றன. நட்பு என்ற உறவு வட்டத்துள் வெறுப்பு, பொறாமை, கோபம் முதலிய விகாரங்கள் தம்மை நிலைநிறுத்திக் கொள்ள முடிவதில்லை. அன்பு, பாசம் இருக்கும் இடத்தில் பிறருக்கான விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை உருவாகின்றது. நானே பெரியவன், முக்கியமானவன், எனது கருத்தே முதன்மையானது என்ற மனநிலையிலிருந்து விடுபட வேண்டும். புரிந்துணர்வு, அன்பு, பாசம் என்ற உணர்வுகளின் அடிப்படையில் குடும்ப உறுப்பினர்களுடனும் நண்பர் வட்டத்திலும் உறவை வளர்த்துக் கொண்டால் நமது வாழ்வு வளம் பெறும். அன்பு, காதல், பாசம் எல்லாவற்றுக்கும் அடித்தளமாக அமைவது உண்மையான நட்பு. "உயிர் காப்பான் நண்பன்" என்ற வார்த்தைகளில் எத்தனை உண்மை உண்டு. நாம் எந்த உணர்வையும் நண்பனுடன் பகிர்ந்து கொள்ளலாம். உண்மை நண்பன் எத்தகைய கஷ்டத்திலும் கைகொடுப்பான். இதை திருவள்ளுவர் மிக ஆழமாக கூறியுள்ளார்.

"உடுக்கை இழந்தவன் கைபோல் - ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு"

ஒருவர் துன்பத்தில் இருக்கும் போது விரைந்து சென்று அந்தத் துன்பத்தை நீக்க மனதில் ஒரு உந்துதல் ஏற்படும். இதை திருவள்ளுவர் அழகாக நட்பு என்ற அதிகாரத்தில் கூறியுள்ளார். நட்பு என்பது மலரைப் போல் அல்ல, ஒரு நாளில் பூத்து உதிர்ந்து விடாது. அது வானில் இருக்கும் நட்சத்திரம் போன்றது. வானம் இருக்கும்வரை இருக்கும். நட்புணர்வு மிகவும் முக்கியம் வாய்ந்தது. இந்த உணர்வு மொழி, பண்பாடு, கலாச்சாரம் வேறுபாட்டாலும் ஒன்றுமை என்ற குடைகீழ் எதுவித வேற்றுமையும் இல்லாமல் நடக்கக்கூடிய உள்ளத்தை நட்பு தருகின்றது. அன்பு, புரிந்துணர்வு, மன்னித்தல் என்ற அடிப்படையில் உணர்ச்சிகளின் பரிமாற்றம் இருந்தால் நட்புறவு என்ற வட்டத்துள் நாம் பரிணமிக்கலாம். உயிர் காப்பான் தோழன், நட்பு பிரதிபலன் எதிர்பாராதது. அது தெய்வீகத் தன்மையுள்ளது. உண்மை நட்பு- தனித்துவமானது. "தோளுக்கு மேல் வளர்ந்தால் தோழன்" என்று கூறுவார்கள். வளர்ந்த பிள்ளையுடன் நட்பாக பழக வேண்டும் என்பது பொருள். எனவே நாம் எல்லோருடனும் உண்மை நட்புடன் வாழ்வோமாக.

திருமதி ஜெயராணி பூபாலசிங்கம்.

# பெண்ணின் முயற்ச்சி



ஒரு பெண் நினைத்தால் செய்யமுடியாத காரியம் ஒன்றுமில்லை. ஒவ்வொரு ஆணின் பக்கத்தில் ஒரு பெண்ணின் உதவி தேவைப்படுகின்றது. திருமதி சரஸ்வதி அரிகிருஷ்ணனின் வெற்றிக்கு பின்னால் அவரது கணவரின் நினைவலைகள் செயல்படுகின்றன. பெண் என்பவள் பூ போன்ற குணம் படைத்தவள்-. ஒரு பெண்ணுக்கு பல இடையூறுகள் வருவதுண்டு. அதை பெரிதுபடுத்தாமல் நடநின்ற காரியத்தை சிவனே என்று செய்து முடித்தல் திருமதி சரஸ்வதி ஹரிகிருஷ்ணனின் முயற்ச்சி. மலேசிய பெண்ணான இவர் மலேசியாவில் பல நிகழ்ச்சிகளை நடத்தி இருக்கின்றார். கனடாவில் 6வது கலை நிகழ்ச்சியை இவ்வருடம் அக்டோபர் 5ம் திகதி பெரிய சிவன் கோவிலில் நடத்தவிருக்கின்றார். இந்நிகழ்ச்சி நல்லபடியாக நடைபெற வாழ்த்துகின்றோம். 5 வருடமாக அவரது கலைநிகழ்ச்சியில் நான் பங்குபெறுகின்றேன்-. அவரிடம் நல்ல விசயங்களை நான் கற்று வருகின்றேன். இவ்வருடம் கனடிய தமிழ் மகளிர் மாமன்றம் கனடிய மலேசியா உறவுபாலம் கலைவிழா மலேசியாவில் நடைபெறவிருக்கின்றது. இதில் கனடிய கலைஞர்களும் மலேசிய கலைஞர்களும் பங்கு பெறுகின்றார்கள். இந்தியாவில் இருந்து பல கலைஞர்களும் இந்நிகழ்ச்சியில் கலந்து கொள்கிறார்கள்-. மலேசிய கனடிய உறவு பாலம் கலைவிழா வெற்றி பெற வாழ்த்துக்கள். இவ் நிகழ்ச்சி நல்லபடியாக நடைபெற திருமதி ஹரிகிருஷ்ணன் பல முயற்சிகளை செய்து வருகின்றார். மலேசியாவில் நடைபெறவிருக்கின்ற இவ் கலைநிகழ்ச்சி சிறப்புற நடைபெற எங்கள் வாழ்த்துக்கள்.

திருமதி சீத்தா கந்தையா

# தாய்மையின் மறுபக்கம்

**“ஊடுருவி”** **“சிறுகதை”**

அந்த அதிகாலை வேளையில் பெயர் கொடுத்து விட்டு ஓடி ஓடி வேலை பார்த்தவள் தான் ராசம்மா. கணவனை இழந்த கைம்பெண் அவள். எத்தனையோ கவளைகள் அவளை வருத்தி நெருடியது. துணையில்லாமல் பிள்ளைகளை வளர்ப்பது எளிதல்லவே. இரண்டு பெண் பிள்ளைகளையும் ஒரு ஆண் மகனையும் துண்பம் அணுகாமல் பாதுகாத்தாள். கள்ளச் சாராயம் குடித்து மாண்டவர் பட்டியலில் தன் கணவனின் பெயரும் பொறிக்கப்பட்டதை எந்த மனைவி தான் ஏற்றுக்கொள்வாள். மதிகெட்ட மனிதனேடு வாழ்ந்த காலமும் போராட்ட காலமே. இன்று இரண்டு பெண்மக்களும் நன்றாகப் படித்து தாதியாகவும் ஆசிரியராகவும் பணிபுரிகின்றார்கள். நல்ல இடத்திலும் திருமணம் செய்து கொடுத்துவிட்டாள் ராசம்மா.

கடைசிப் பிள்ளையான மகன் பிடிவாதமாக மேற்படிப்புப் படிப்பதற்காக இந்தியா செல்ல வேண்டும் என்று காத்திருந்தான். ராசம்மா எங்கெங்கோ ஓடித் தேடி உதவிப்பணம் பெற்றாள். சகோதரிகளும் தங்களால் இயன்ற அளவு உதவி செய்தார்கள். “டேய் ராசா நல்லாப் படிப்பா” படிச்சிட்டு வந்து வேலை பார்த்து தான் பணத்தை திரும்பக் கட்டவேனும் ஞாபகம் வைச்சிக்கோ என்று தணிவாகக் கூறினாள் ராசம்மா. எத்தனை தரம் செல்லுவீங்கள், பணத்தை திரும்பத் தராமல் செத்தா போவேன் என்றான் தங்கராசா, ராசம்மா அதிர்ந்து போனாள். இப்ப நான் என்ன சொல்லிவிட்டேன் என்று இப்படிக்கத்துகின்றாய். ஏம்பா நான் எதுவும் தப்பா சொல்லிட்டேனா? மகன் தான் விரும்பியபடி எஞ்ஞினியர் படிப்பு படிக்கப் போறான் என்று மகிழ்ந்த அந்தத் தாயுள்ளம் நெருங்கிப் போனது.

தங்கராசா இந்தியாவில் உள்ள பெங்களுர் கல்லூரியில் படிக்கப்போறான். அவன் புறப்படுவதிற்கு முதல் நாளே சகோதரிகள் இருவரும் தம் கணவர்மாரோடு முதல் நாளே வந்து விட்டார்கள். வீட்டில் ஒரே கலகலப்புத் தாண்டவம் தான். ஆளுக்கொரு அறிவுரைகள் செல்லிக்கொண்டிருந்தார்கள். மறுநாள் விதவிதமான சமையல் சாப்பாடு தடபுடலாக நடந்தது. மூத்த மகள் மல்லிகா தம்பிக்கு மூன்று பவுனில் ஒரு சங்கிலியைப் போட்டு விட்டாள். இளையவள் பவானி கையில் ஒரு பிரேஸ்லெட்டை மாட்டி விட்டாள். அம்மா தம்பியைப் பாருங்கம்மா ராஜா மாதிரி இருக்கான் என்று கிண்டலடித்து தங்கள் மகிழ்ச்சியைக் கொண்டாடினார்கள். மல்லிகா, பவானி வீட்டுத் தலைவர்களும் சும்மா இருக்கவில்லை, ஆளுக்கு ஆயிரம் வெள்ளி நோட்டாக மச்சான் கையில் வைத்தார்கள். அம்மாவைப் பற்றி கவலை வேண்டாம் மாப்பிள்ளை. நாங்கள் பார்த்துக் கொள்கின்றோம். நீங்கள் நல்லாப் படிச்சிட்டு வாங்க அது போதும் என்று மருந்தாகப் பேசினார்கள்.

சரி சரி புறப்படுங்கோ, மணியாச்சு இரண்டு மணி நேரத்துக்கு முன்னரே விமானத்திடலுக்கு போய்விட வேண்டும் என்று துரித்தப்படுத்தினாள் மல்லிகா. தங்கராசாவின் மனம் பஞ்சாகப் பறந்தது. சீமான் வீட்டுப்பிள்ளையாக வெளிநாட்டுக்குப் படிக்கப் போறான். கல்லூரியில் சேர்வதற்கான எல்லா ஏற்பாடுகளையும் அவனது ஆக்காள் புருஷன்மார் நன்றாகச் செய்திருந்தார்கள்.

காலம் ஓடியது......

ஓராண்டு காலம் கடிதங்கள் வந்த வண்ணம் இருந்தது. பின்னர் தொலைபேசியில் அழைத்து இரண்டோரு வார்த்தைகள் பேசுவதோடு சரி. தங்கராசாவின் நடவடிக்கைகளால் ராசம்மா மனம் உடைந்து போனால். வயதும் ஐம்பத்தாறாகி விட்டது, உடல் தளர்ந்தது. இனி சட்டப்படி வேலை செய்ய முடியாது. பெண் பிள்ளைகளின் குழுந்தைகளைப் பார்த்துக் கொண்டு பெருமூச்சு விட்டாள். செம நிதிப் பணத்தை எடுத்து மகனுக்காக பட்ட கடனையும் அடைத்தால் ராசம்மா. மருமக்களும் உதவினார்கள், அவர்களின் பொருந்தன்மையை எண்ணி ஆணந்தக் கண்ணீர் வடித்தாள். இந்தியாவிற்கும் மலேசியாவிற்கும் என்ன தொலை தூரமா? மூத்த மருமகன் கல்லூரிக்கு கடிதம் ஒன்றை எழுதினார். தங்கராசாவின் செயற்பாடுகள் பற்றிய விபரம் அறியத்தருமாறு வேண்டிக் கே கட்டிருந்தார்.

ஐந்தாண்டுகளுக்குப் பிறகு அவர்களுக்கருக் கிடைத்த செய்தி அவர்களை துடிதுடிக்க வைத்தது. தங்கராசாவிற்கு பெரும் பணக்காரப் பெண்ணின் சிநேகிதம் கிடைத்ததால் தனது கல்வியைத் தொடர அமேரிக்கா சென்று விட்டதாகவும், தங்கராசா அந்தப்பெண்ணை பதிவுத்திருமணம் செய்து கொண்டதாகவும் கல்லூரி முதல்வர் குறிப்பிட்டிருந்தார். மனமுடைந்து போன ராசம்மா மயங்கி விழுந்தாள். உருப்படாத கணவனால் ஏற்பட்ட துன்பத்தைவிட மகன் செய்த அடாத செயல் ராசம்மாவை அளவுக்கு அதிகமாகவே பாதித்திருந்தது.

மல்லிகா, பவானி அவன் எங்கிருந்தாலும் நல்லா இருக்கட்டும். நான் செத்துப் போனாக் கூட அவனுக்கு அறிவிக்க வேண்டாம். ராசம்மாவிற்கு மேல் மூச்சு வாங்கியது. அம்மா ஆஸ்ப்பத்திரிக்கு போகலாம் வாங்கோ என்ற ஒரே குரல் எல்லோரும் ராசம்மாவை கைப்பிடியாகத் தூக்க ஆரம்பித்தார்கள். ஆனால் அவர்களால் உடலைத்தான் தாங்கிப் பிடிக்க முடிந்தது "உயிர்" அது ஒரு கணத்தில் பறந்து விட்டது.

**தாய்மையின் மறுபக்கம் யார் அறிவார்.**



## வாழ்த்துக் கவி

**அன்னை ஈன்றெடுத்த பெண்மையும் நீ**

**ஆருயிர்த் தந்தை வளர்த்தெடுத்த**
**கண்மணியும் நீ**

**அன்புச் சகோதரங்கள் கட்டியனைத்த**
**பாசக்கிளியும் நீ**

**பாசமிகு கணவர் கைபிடித்த மனைவியும் நீ**

**பேசும் மழலைக்கு பாடும் பாட்டியும் நீ**

**நாடு கடந்து வந்தும் நட்புறவுக்கு**
**அர்த்தமும் நீ**

**நாடறிந்த தமிழ்ப் பெண்மையும் நீ**

**உன் ஒளி என்றும் ஒளியை நோக்கி**

**பயணிக்க வாழ்த்துகின்றோம்.**

**ரஜீவன் குகதாஸ்**

# இன்றைய கலைஞர்கள்













ஜனன் விஜிதா
அன்ரன் விலிக்ஸ்
சுவஸ்திகா சிறிபாலச்சந்திரன்
சங்கீதா சிறிபாலச்சந்திரன்
கலாப மயூரி பத்மஜா ரகுநாதன்
பவித்திரா தவராஜா

# கனேடிய தமிழ் மகளிர் மாமன்றம்

## “ ஒளியை நோக்கி ” நிகழ்வின் ஐந்தாம் ஆண்டு வரவு விபரம்

| | |
|---|---|
| 1. லோகன் ராசையா | $ 280.00 |
| 2. குறுந்தட்டு வெளீயிடு | $ 485.00 |
| 3. மீனாட்சி அம்மன் | $ 200.00 |
| 4. திரு. ஈசா பரா | $ 150.00 |
| 5. மகாராஜா ரெக்ஸ்டைல்ஸ் | $ 250.00 |
| 6. நந்தா உணவகம் | $ 150.00 |
| 7. ஒப்டி மார்ட் | $ 150.00 |
| 8. பி.கே.எக்சிடன் | $ 100.00 |
| 9. திரு. மதி கேசரி | $ 100.00 |
| 10. “தமிழ்வேள்” திரு வி கந்தவனம் | $ 80.00 |
| 11. ஏசியா கோல்டு | $ 100.00 |
| 12. டாக்டர் போல் ஜோசப் | $ 100.00 |
| 13. சைக்கில் பிராண்ட் ஊதுபத்தி | $ 100.00 |
| 14. இராகாலயா அக்கடமி | $ 50.00 |
| 15. திருமதி. ஞானதீபம் | $ 50.00 |
| 16. ஈசன் டிரவல்ஸ் | $ 100.00 |
| 17. சிறு தொகை அன்பளிப்பு | $ 280.00 |
| மொத்த வரவு | $ 2625.00 |

| | |
|---|---|
| 1. ஆண்டு மலர்ப் பதிப்பு | $ 1600.00 |
| 2. கனடா கந்தசுவாமி ஆலய மண்டபம் | $ 650..00 |
| 3. ஒலிபெருக்கி வாடகை | $ 200.00 |
| 4. பரிசுப் பொருட்கள் கேடயம் | $ 380.00 |
| 5. பொன்னாடை | $ 19000 |
| 6. பூ மாலை | $ 105.00 |
| 7. பூங்கொத்து | $ 10.00 |
| 8. சுற்றறிக்கை, அழைப்பிதல், விளம்பரம் | $ 365.00 |
| 9. குறுந்தட்டு பதிப்பு | $ 135.00 |
| 10. புகைப்படம் | $ 150.00 |
| 11. சில்லரைச் செலவு | $ 72.00 |
| மொத்த செலவு | $ 3867.00 |
| மேலதி செலவு | $1232.00 |

மேலதிக செலவுகள் கனேடிய மகளிர் மன்ற நிர்வாகம் ஏற்றுக்கொண்டது



கடந்த 21-01-2013 இல் பன்னாட்டுத் தூதுவர் டத்தோ ஸ்ரீ ச.சாமிவேலு அவர்களுடன் ஒரு கூட்டுக் கலை நிகழ்ச்சி நடத்துவது பற்றி உரையாடிய போது எடுத்த படம்



உலகத்தமிழர் பாதுகாப்புக் குறித்து நடைபெற்ற மாநாட்டில் உரை நடத்திய பின் இலங்கை மேலவை உறுப்பினர் மாவை சேனாதிராஜா அவர்களுடன் கலந்துரையாடிய போது திருமதி சரஸ்வதி அரிகிருஷ்ணன்